उपनीतस्यतु कपालाग्निना पैतृमेधिकविधिना सर्वं मन्त्रवत्कुर्यात्। अपूर्ण द्वादशाब्द ब्रह्मचारिणः न सपिण्डी करणम्। पूर्वोक्त विषयाः कन्याविषयेऽपि योजनीयाः। अनुपनीतस्य, अनूढायाश्च मृतौ तुषाऽग्निनैव दाहः। द्वादश वर्षादूर्ध्वं यदा कदावा मरणेऽपि नैव सपिण्डीकरणम्। नारायणबलिरेव कुर्यात्॥

பரிஷேசனம் செய்ய வேண்டும். தர்வீ ப்ரஹரணம். ஸ்னனம், நக்ந ப்ரச்சாதனம். மறுபடி ஸ்னனம் செய்து விட்டு கிருஹம் திரும்ப வேண்டும்.

ஐந்து வருடத்திற்கு உட்பட்ட பால கன்யைகள் விஷயத்தில் மந்த்ரமன்னியில் அஸ்தி ஸஞ்சயனம் உண்டு என்பதாக கௌதமரின் வசனம். இதனுல் ஐந்தாவது வயது முதல் அஸ்தி ஸஞ்சயநம் ''ஸமந்த்ரகம்'' என்று ஆகிறது.

மூன்ருவது வயதில் மரணம் ஸம்பவித்தால் தர்ப்பம், மந்த்ரம் இல்லாத 30 திலோதகங்களும், 10 பிண்டங்களும் கிருஹத்திற்கு வெளியில் செய்ய வேண்டும்.

நான்காவது வயதிலிருந்து 75 திலோதகங்கள் உண்டு. 10 பிண்டங்கள், 10 பலிகள், 12வது தினத்தில் நாராயண பலி.

ஐந்தாவது வயதில் இவ்விதமே — ஸஞ்சயநமோ ஸமந்த்ரகம். 6, 7, 8 வயதுகளில் முன்பு போல தஹநம், ஸஞ்சயநம் இவைகளைச் செய்து திலோதக பிண்ட பலி ப்ரதான ஏகோத்தர விருத்தி, நவச்ராத்த ஷோடசம் இவைகளை மந்த்ரங்கள் இல்லாமல் தந்த்ரத்துடன் மட்டும் செய்ய வேண்டும். பன்னிரண்டாவது தினத்தில் நாராயண பலி உண்டு.

ஒன்பதாவது வயது முதல் தஹந ஸஞ்சயநம் இவைகளை முன்பு போலச் செய்து பாஷாண ஸ்தாபன வாஸோதக திலோதக பிண்ட பலி ப்ரதான ஏகோத்தர விருத்தி நவச்ராத்த ப்ரபூத பலி சாந்தி, ஆநந்த, ஹோம ஏகோத்திஷ்ட ஷோடச ச்ராத்தங்களையும் செய்ய வேண்டும் (மந்திரங்கள் அல்லாமல் தந்த்ரத்துடன்). 12வது தினம் நாராயண பலி ச்ராத்தம். உபநீதனை கபாலாக்நியினுல் ஸம்ஸ்கரித்து பைத்ருமேத விதிப்படி செய்கிறது. 12 வயது நிரம்பாத ப்ரம்மச்சாரி மரணத்தில் ஸபிண்டீகரணம் வேண்டாம் என்று சிலர் அபிப்பிராயம். உபநயநம் ஆகி விட்டபடியால் எல்லாவற்றையுமே செய்ய வேண்டும். மேலே சொன்னது எல்லாம் கன்யையின் மரணத்திலும் பொருந்தும்.

## १३. अस्थिदाहः

अन्याग्निनादग्धस्य, अमन्त्रदग्धस्य अकृते सञ्चयने, दशाहे, अकृतोदक पिण्डदानस्य, एकादशाहे, अकृतैकोद्दिष्टस्य, दुर्मृतस्यच पुनर्दाहं कुर्यात्।आदौ अस्थीनिगृह्णीयात्। तत्सङ्ख्याचैवम्। शिरसः पञ्च, उरसः पञ्च, कुक्षेः पञ्च,हस्ताभ्यां त्रीणि-त्रीणि, ऊरुभ्यां त्रीणि-त्रीणि, पादाभ्यां त्रीणि-त्रीणि इति, यथा लाभं वा गृहीत्वा, क्षीरेण प्रक्षाल्य दक्षिणाग्रान्दर्भान्संस्तीर्य तेषु पूर्वाक्त संख्यानु सारेण अन्यै रस्थिभिश्च पुरुषाकृतिं कृत्वा विहितेनाग्निना विधिवद्दहेत्। ''आयाहि'' इति मन्त्रेण प्रतिकृतौ, आवाह्य सर्वं पैतृमेधिकं विधिवत्कुर्यात्। चरु, प्रदक्षिण, सिग्वात, पादबन्धनानि न भवन्ति। ''अस्मा त्व''मिति मन्त्रेण दाह इति केचित्। केचिन् ''मैनमग्ने'' इति द्वाभ्या मेवेति॥

सञ्चयनञ्चतदानीमेव कुर्यात्॥ सद्यस्सञ्चयनं करिष्ये इति सङ्कल्प्य कुर्यात्॥

अस्थ्नां प्रतिकृतेर्दाहे सद्यस्सञ्चय इष्यते॥

---

எத்தனை வயது ஆனாலும், உபநயநமற்ற புருஷன் விஷயத்திலும, விவாஹமாகாத கன்யை விஷயத்திலும் 12வது தினம் ஸபிண்டீகரணம் கிடையாது. நாராயண பலி மட்டும் உண்டு.

## 12. அஸ்தி தாஹம்

விஹிதமான அக்நியல்லாமல் வேறு அக்நியினால் தஹநம் நடந்தவனுக்கும், மந்த்ரமற்ற தஹநம் ஆனதிற்கும், ஸஞ்சயநம் செய்யப்படாமலோ, 10வது தினத்தில் உதக தானமோ பிண்ட தானமோ செய்யப்படாமல் இருந்தாலோ, 11வது தினம் ஏகோத்திஷ்டம் செய்யப்படாமல் இருந்தாலோ துர் மரணம் அடைந்திருந்தாலோ அவனுக்கு புநர் தஹநம் உண்டு. அவனுடைய அஸ்தி இருக்கும் பக்ஷத்தில் தலயிலிருந்து 5, மார்பிலிருந்து 5, வயிற்றிலிருந்து 5, கைகளிலிருந்து மும்மூன்று, துடைகளிலிருந்து மும்மூன்று, கால்களிலிருந்து மும்மூன்று, அல்லது கிடைத்த அளவை எடுத்து பாலினால் அலம்பி, தெற்கு நுனியாக தர்ப்பங்களைப் பரப்பி அதில் முன்பு எடுத்த ஸங்கையை

# १३. प्रतिकृति संस्कारः

अस्थ्यभावे पलाश वृन्तैः कुशैर्वा प्रतिकृतिं कृत्वा विहिताग्निना विधिवद्दहेत्। यथाः — अपिवा अशीत्यधिक त्रिशत पलाश वृन्तैः पुरुषाकृतिं कुर्वन्ति। ''चत्वारिंशता शिरः प्रकल्पयते, दशभिर्ग्रीवां, विंशत्योरः, त्रिंशतोदरं, पञ्चाशता पञ्चाशता, एकैकं बाहुं, ताभ्यामेव पञ्चभिः पञ्चभिरङ्गुलीरुपकल्पयेत्, सप्तत्या — सप्तत्या एकैकं पादं, ताभ्यामेव पञ्चभिः पञ्चभिरङ्गुलीः, अष्टाभिश्शिश्नं द्वादशभिर्वृषणं। पलाशवल्कैः कुशैर्वा, सन्धिषु संवेष्टय'' इत्युक्तरीत्या प्रतिकृतिं कृत्वा स्नापयित्वाऽलङ्कृत्य दक्षिणाग्रान्दर्भान्संस्तीर्य, तेष्वेनं दक्षिणा शिरस मुत्तानं निपात्य पत्तो दशेनाहतेन वाससा प्रच्छाद्य बान्धवाः पर्युप विशन्ति। कर्ता, नमस्कृत्य ''प्रति कृति संस्कारं करिष्ये'' इति सङ्कल्प्य'' आयाहि (पितः) प्रेत'' इत्यारभ्य सर्वस्य प्रतिशीवरीत्यादिकं परेयुवाꣳसमिति प्रधान होमं हुत्वा (चरु प्रदक्षिणसिग्वातपादबन्धनानि न भवन्ति।) अपेत वीतेति प्रतिपद्य, सर्वं कुर्यात्। सद्यस्सञ्चयनं। अस्थ्नामभावे सञ्चयन मन्त्र जप एव॥

---

அனுஸரித்து இதர அஸ்திகளாலும் புருஷாக்ருதியைச் செய்து விஹிதமான அக்நியைக் கொண்டு தஹநம் செய்ய வேண்டும். ''ஆயாஹி பிதஃ ப்ரேத'' என்று ப்ரதிக்ருதியில் ஆவாஹநம் செய்து பித்ருமேத ஸம்ஸ்காரத்தை முறைப்படி செய்ய வேண்டும். சரு - ப்ரதக்ஷிணு ப்ரதக்ஷிண - ஸிக்வாதம், பாதபந்தநம் இவைகள் கிடையாது. சிலரின் அபிப்பிராயம் மைநமக்நே மந்திரத்திேைலயே தஹநம் என்று. சிலர் அஸ்மாத்த்வமஸி என்கிற புநர் தஹந மந்திரத்திைல்தான் தஹநம் செய்ய வேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறுர்கள். ஸத்யஃ ஸஞ்சயநம்.

# 13. பிரதிகிருதி ஸம்ஸ்காரம்

அஸ்தி கிடைக்கப் பெருத விஷயத்தில் பலாச விருந்தங்களாலோ தர்ப்பங்களாலோ பிரதிகிருதியைச் செய்து விஹிதமானஅக்நியைக் கொண்டு சாஸ்திரப்படி தஹநம் செய்ய

# १४. अङ्गवैकल्यनिमित्त पुनर्दाहः

मन्त्र वद्दाहे कृतेऽपि अदग्धस्य कस्यचिदङ्गस्य दर्शने, तस्याङ्गस्य पुनर्दाहः कर्तव्यः। चिताग्निसद्भावे तेन दहेत्। अभावे, अनुगत प्रायश्चित्तविधिना, अग्निमुत्पाद्य तेन दहेत्। गोत्रस्य +अद्य अहनि, अनग्निदग्धमङ्गं पुनर्दहन विधिना संस्करिष्यामि। कृच्छ्रं चरित्वा, अस्मात्त्वमिति मन्त्रेणतदङ्गंदहेत्। ''सूर्यन्ते'' इत्यादिसमानम्। तूष्णीमेव दहेदिति केचित्। सद्यस्सञ्चयनं यथावत्कुर्यात्॥

வேண்டும். 380 பலாச •விருந்தங்களை (ஸமித்)க் கொண்டு புருஷாக்ருதியைச் செய்ய வேண்டும். அல்லது அந்த அளவு தர்ப்பங்களைக் கொண்டும் செய்யலாம். தலைக்கு 40, கழுத்துக்கு 10, மார்பிற்கு 20, வயிற்றிற்கு 30, ஒவ்வொரு கைக்கும் 50-50, விரல்களுக்கு 5-5, ஒவ்வொரு பாதங்களுக்கும் 70-70, கால் விரல்களுக்கு 5-5, லிங்கத்திற்கு 8, விருஷணத்திற்கு 12. இப்படியாக ஸம்பாதித்து தர்ப்பங்களால் அந்தந்த ஸந்தியைக் கட்டி ப்ரதிக்ருதியைச் செய்து ஸ்னானம் அலங்காரம் செய்வித்து தெற்கு நுனியாக தர்ப்பங்களைப் பரப்பி, அதில் தெற்கு தலையாக படுக்க வைத்து, பாதத்தில் நுனி வரும்படியாக புதிய வஸ்திரத்தினால் போர்த்தி பந்துக்கள் சூழ்ந்திருக்க வேண்டும். கர்த்தா ஸ்னானம் செய்து, புண்ட்ரதாரனம்செய்து ''ப்ரதிக்ருதி ஸம்ஸ்காரம் கரிஷ்யே'' என்பதாக ஸங்கல்ப்பித்து ''ஆயாஹிபிதஃ ப்ரேத'' என்பதாக ஆவாஹநம், செய்து ஸர்வஸ்ய ப்ரதிசீவரீ ஆரம்பித்து ''பரேயுவாம்ஸம்'' பிரதான ஹோமத்தைச் செய்து அபேதவீத ஆரம்பித்து எல்லாவற்றையும் செய்ய வேண்டும் (சரு - பிரதக்ஷிண ஸிக்வாத பாதபந்தனங்கள் கிடையாது) ஸத்யஃ ஸஞ்சயநம் மந்த்ர ஜபம்தான்.

## 14. அங்க வைகல்ய தாஹம்

மந்த்ரவத்தாக தஹநம் செய்யப்பட்டிருந்தும் ஏதாவது ஒரு அங்கம் தஹநத்திலிருந்து விடப்பட்டிருந்து தென்பட்டால் அந்த அங்கத்திற்கு புநர் தஹநம் அவச்யம் செய்ய வேண்டும். சிதையில் அக்நி இருக்குமாகில் அதைக் கொண்டு தஹநம் செய்யலாம். ச்மசாநாக்நி இல்லாவிடில் அக்நி நஷ்ட ப்ராயச்சித்தம் செய்து அந்த அக்நியினால் புநர் தஹந மந்த்ரத்தினால் தஹநம் செய்து ''ஸூர்யம் தே'' என்று ஆரம்பித்து எல்லாம் செய்து பூர்ணமாக தஹநம் ஆனதும் க்ரமப்படி ஸஞ்சயநம் செய்ய வேண்டும்.

# १५. प्रोषित कृत्य विषयः

प्रोषितयोर्मातापित्रोः पञ्चदशवर्ष पर्यन्तं वार्ताऽनाकर्णने, षोडशे सम्प्राप्ते आषाढादि पैतृकमासेषु चतुर्षु अन्यतमे मासे कृष्णाष्टमी, कृष्णैकादशी दर्शेषु अन्यतरस्यां तिथ्यां नारायण बलिं कृत्वा प्रतिकृति दाहेन संस्कृत्य दशरात्रमुदकदानाद्यानन्दहोमान्तं कृत्वा एकादशाहे, एकोद्दिष्टं, द्वादशाहे सापिण्ड्यं, तथा तत्तत्काले ऊनमासिकादीनि अनुष्ठाय यस्मिन्मासि, यस्यां तिथ्यां कर्म आरब्धं, सैवतस्य (तस्याः) तिथिरिति निश्चित्य आब्दिकप्रत्याब्दिकानि अनुतिष्ठेत्॥

मातृपितृ व्यतिरिक्त बन्धु वर्गेषु प्रोषित विषये त्रयोदशे वर्षे पूर्वोक्त पैतृकमासेषु नारायण बलिं कृत्वा प्रतिकृतिदाहं कुर्यात्। अत्र तृतीये दिन एव उदकदान पिण्डबलि प्रभूत बलि समाप्तिः। आनन्द होमश्च। तुरीयेऽहनि एकोद्दिष्टं। पञ्चमेऽहनि सापिण्ड्यमिति निर्णयः। ततः यथाक्रमं मासिकाद्यनुष्ठानम्॥

# 15. ப்ரோஷித க்ருத்ய விஷயம்

*தேசாந்தரம் சென்றிருந்த தாய், தகப்பன் இவர்களின் இருப்பிடம் அறிய முடியாதபடி ஆகிவிட்டால் பதினைந்து வருடங்களுக்குப் பிறகு 16வது வருடத்தில் ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி மாதங்களில் கிருஷ்ண அஷ்டமி, கிருஷ்ண ஏகாதசி, அமாவாஸ்யை இவைகளில் ஏதாவது ஒரு திதியை அவர்களின் மரண திதியாகக் கொண்டு முதலில் நாராயண பலியைச் செய்து பிரதிகிருதி தாஹத்தினால் ஸம்ஸ்காரம் செய்து, தசராத்ரம், ஆசௌசம் அனுஷ்டித்து க்ரமப்படி பிரதம தினத்திலேயே பாஷாண ஸ்தாபனாதிகளைச் செய்து, 11வது தினம், ஏகாஹம், 12வது தினம் ஸபிண்டீகரணம் செய்ய வேண்டும். பிறகு மாதாந்த்ர ஊன மாஸிகாதிகள்; அடுத்த வருடம் அதே திதியில் ஆப்திகம்; க்ரமமாக ப்ரத்யாப்திகாதிகளை அனுஷ்டித்து வர வேண்டும்.*

*மாதா பிதாக்கள் தவிர, இதரர்களின் தேசாந்த்ர கமனத்தின் நிலையை அறியாத விஷயத்தில் 12 வருடங்கள் முடிந்ததும், 13வது வருடத்தில் மேலே குறிப்பிட்ட மாதங்களில் மேலே குறிப்பிட்ட*

# नारायणबलिः

हेमाद्रौ नारायण बलि प्रयोगः दृश्यते। इदानीं सोऽनूद्यते। देवलः विषाग्नि जलपाषाणैर्दुर्मृतस्य प्रमादतः। कर्मादौदेहशुद्ध्यर्थं नारायण बलिं चरेत्॥

मार्कण्डेयः — दंष्ट्रिभिर्नखिभिर्वापिशृङ्गिभिर्यदिदैवतः।
वृक्षैर्जलैश्च पाषाणैः दैवतो यः प्रमीयते।
तस्यैवदेह शुद्ध्यर्थं कर्मादौ लोककाङ्क्षया।
नारायण बलिं कुर्यात्सर्व पापापनुत्तये।
पराशरः- दुर्मृतस्य विषाद्यैर्वाचोरैः खड्गैर्मृगादिभिः।
कर्मादौ लोक साक्ष्यर्थं नारायण बलिं चरेत्।
नारायणो जगत्कर्ता सर्वपापापहानृणाम्।
दुर्मृतानां विशेषेण महा पाप प्रणाशनः।
मरीचिः— दुर्मृतस्य खरोष्ट्रैश्च पशुभिर्वृक्ष पातनैः।
जलैः पाषाण लगुडैर्मथितस्य प्रमादतः।
कर्मादौ लोकमन्विच्छन् नारायण बलिं चरेत्॥

---

திதிகளில் நாராயண பலி, பிரதிகிருதி ஸம்ஸ்காரம் இவைகளைச் செய்து மூன்றாவது தினத்தில் தசம தின க்ருத்யம், நான்காவது தினத்தில் ஏகாஹம், ஐந்தாவது தினத்தில் ஸபிண்டீகரணம் செய்ய வேண்டும். பிறகு க்ரமப்படி ஊன மாஸாதிகளைச் செய்து ஆப்திக ப்ரத்யாப்திகங்களைச் செய்ய வேண்டும்.

## 16. நாராயண பலி

நாராயண பலி ப்ரயோகமானது பலவிதமாகச் சொல்லப்படுகிறது. ஆயினும் ''ஹேமாத்ரி'' என்கிற க்ரந்தத்தில் சொல்லப்பட்டுள்ளதை இங்கு சுருக்கமாக விஜ்ஞாபித்துக் கொள்கிறேன்.

துர்மரணம் முதலியவைகளில் ஆதியில் நாராயண பலியை அவச்யம் அனுஷ்டித்துத்தான் கர்மாவை ஆரம்பிக்க வேண்டும் என்று பல மஹர்ஷிகளின் அபிப்பிராயம். உபவீதத்துடன் தான்

कर्मादौ पूर्वदिवसे मृतस्यैतद्विजन्मनः।
प्रायश्चित्तं तदा कृत्वा धर्मशास्त्रोक्तमार्गतः।
आहूय विप्रान्गणशश्चतुर्विंशतिमादरात्।
तदर्धं वा तदर्धं वा संपाद्यश्रुति पारगान्।
अभ्यर्च्यगन्धवस्त्राद्यै रामं वास्वर्णमेववा॥
करिष्येऽहं मृतस्यास्य बलिं नारायणात्मकम्।
लौकिकाग्निं प्रतिष्ठाप्य परिस्तीर्य विधानतः।
स्रुवेणाज्यं समादाय व्याहृतीरुच्चरन्हृदि।
पृथक्पृथक्च्छतं हुत्वा सङ्ख्यामेकां समुद्वहन्।
व्याहृतीनां त्रयं हुत्वा पृथगग्नौ विधानतः।
सङ्ख्यामेकां त्रयं कृत्वा ह्यष्टोत्तर शतं क्रमात्।
हुत्वैवं विधिवद्विप्रो होम शेषं समापयेत्।
ब्राह्मणान्समलङ्कृत्य पूवोक्ते न विधानतः।
चतुर्विंशति नामानि केशवादीनि वैक्रमात्।
चतुर्विंशति विप्राणां प्रत्येकं विनियोजयेत्।
द्वादश ब्राह्मण पक्षे नाम द्वयं।

செய்ய வேண்டும். இதில் கேசவாதிகள் 12, வாஸுதேவாதிகள் 12. ஆக மொத்தம் 24. 24 பிராம்மணர்கள் கிடைத்தாலும் சரி அல்லது 12 அல்லது 8 அல்லது 6 இப்படியாகக் கிடைக்கிறவர்களை அனுஸரித்து அவர்களின் பேரில் 24 நாமாக்களை வகுத்து வரிக்க வேண்டும். ஸங்கல்ப்பம் செய்து கொண்டு அவர்களுக்கு ஆஸநம் ஸமர்ப்பிக்க வேண்டும். பாத ப்ரக்ஷாளநம், கந்தாத்யுபசாரம் செய்ய வேண்டும். லௌகிகாக்நியை ப்ரதிஷ்டை செய்து தர்வீ ஸம்ஸ்காராந்தம் செய்து பூராதி வ்யாஹ்ருதிகளை 108, 108 ஆக ப்ரத்யேகம் ஹோமம் செய்ய வேண்டும். ''ஓம் பூः ஸ்வாஹா அக்நயே இதம் நமம, ஓம் பூஸ் ஸ்வாஹா அக்நய இதம் நமம'' என்று மூன்று வ்யாஹ்ருதி ஹோமங்களையும் செய்ய வேண்டும். பிறகு, ''ஓம் பூர்புவஸ்ஸுஸ்வாஹா - ப்ரஜாபதயே இதம் நமம'' என்பதாகவும் 108 ஆஹுதிகள். பிராயச்சித்த ஹோமம். ப்ராணாயாமம். பரிஷேசனம். உபஸ்தானம் செய்து, தண்டுலம்

षड् ब्राह्मण पक्षेनामचतुष्टयं चतुर्ब्राह्मण पक्षे नाम षट्कं।
ब्राह्मण त्रय पक्षे नामाष्टकं।
इति यथासम्भवं यथा सङ्ख्यं विनियोजयेत्।
तण्डुलांश्चैव मुद्गाश्चमाषान्शाकं घृतं दधि।
ताम्बूलं दक्षिणाश्चैव विप्रेभ्यः परिकल्पयेत्।
नान्नेन तोषयेद्विप्रान् अधिकारो नदृश्यते।
यथा सपिण्डनं भूयाद्दुर्मृतस्य द्विजन्मनः।
न तावदन्नं कर्तव्यं विप्रैरध्यात्म वेदिभिः।
तदा विप्रैर्न भोक्तव्यं यदि भुङ्क्ते स पातकी।
जातकर्मणि विप्रस्य दुर्मृतस्य द्विजन्मनः।
नारायण बलौ चैव नान्न श्राद्धं समाचरेत्॥
हिरण्येनैव धान्यैर्वाकुर्याच्छ्राद्धं विधानतः।
अन्नेन कारयेद्यस्तु सचण्डाल समोभवेत्॥

दुर्मृतानां द्विजन्मनां परलोकहितार्थं कर्मादौ आमेन हिरण्येन वा, ''नारायण बलिं करिष्यामि'' इति सङ्कल्प्य कर्म कुर्यात्॥

முதலானவைகளை, ''கேசவ ப்ரீதிம் கேசவ நாராயண மாதவ கோவிந்த விஷ்ணு மதுஸூதந ப்ரீதிம் காமய மாநஃ துப்யமஹம் ஸம்ப்ரததே'' இப்படியாக வரித்த க்ரமத்தில் தத்தம் செய்து விட்டு அக்ஷதை, துளசி இவைகளை எடுத்துக் கொண்டு, ''ஏகோ விஷ்ணுஃ + அவ்யயஃ அநேந யத்கிஞ்சித் ஹிரண்ய ஸஹித ஆமரூப நாராயண பலிநா பகவாந் ஸர்வாத்மகஃ ஸ்ரீ நாராயணஃ ப்ரீயதாம்'' என்று அக்ஷதை, துளசி கலந்த ஜலத்தைக் கிழக்கு நுனிகளாகப் போடப்பட்ட தர்ப்பங்களில் விட்டு விட வேண்டும்.

இவ்விதமாகவே கந்யா பாலர்களின் 12வது தினத்தில் செய்ய வேண்டிய நாராயண பலியையும் செய்ய வேண்டும்.

तत्प्रयोगः सङ्ग्रहेण विलिख्यते। सर्वमुपवीत्येव । अनुज्ञां प्रार्थ्य सङ्कल्पयेत्। कृच्छ्रश्चचरेत्। यथा सम्भवं ब्राह्मणान्वृणुयात्।

अस्मिन्नारायण बलि श्राद्धे केशवाय नमः, इति केशव, नारायण, माधव, गोविन्द, विष्णु, मधुसूदनेभ्यो नमः। त्रिविक्रिमवामन श्रीधर हृषीकेश पद्मनाभ दामोदरेभ्यो नमः। वासुदेव, सङ्कर्षण, प्रद्युम्न, अनिरुद्ध, पुरुषोत्तम, अधोक्षजेभ्यो नमः। नारसिंह, अच्यत, जनार्दन, उपेन्द्र, हरि, श्रीकृष्णेभ्यो नमः इत्येवं क्रमेण वृत्वा आसानादीन्समर्प्य एकस्मिन् चतुरश्रे· मण्डले पादप्रक्षालनं कुर्यात्। स्वयञ्च पादौ प्रक्षाल्य द्विराचामेत्। विप्रां श्चाचामयेत्। क्रमशः गन्धाद्युपचारान्समर्पयेत्। अग्निप्रतिष्ठादि चतुष्पात्र प्रयोगः। (अग्निसन्धान प्रयोगवत् दर्वी संस्कारान्तं कुर्यात्॥) परिषेचनं। भूः स्वाहा — १०८, भुवस्स्वाहा १०८, सुवस्स्वाहा १०८, ओं भूर्भुवस्सुवस्स्वाहा १०८। अनाज्ञात त्रयं व्याहृति चतुष्टयं। पूर्णाहुतिः (श्री विष्णवे स्वाहा) परिषेचनं - उपस्थानं। तण्डुलादीन् केशव प्रीतिं (केशवादि प्रीतिं कामयमानः तुभ्यमहं सम्प्रददे। एकदत्ते अनेन यत्किञ्चिद्धिरण्य सहित आमरूपेन नारायण बलि कर्मणा नारायणः प्रीयताम् इति तुलसी मिश्रित साक्षतं जलं प्रागग्रेषु दर्भेषु निनयेत्॥ एवं प्रकारेणैव कन्याबालयोः द्वादशाहे कर्तव्य नारायण बलिंश्च॥

अपरप्रयोगः परिसमाप्तः

## ஜநநாசௌசம்

1. நாலு மாதத்தில் கர்ப்ப ஸ்ராவமுண்டானால் பிதாவிற்கு ஸ்நான மாத்திரம் உண்டு. ஞாதிகளுக்கு அதுவுமில்லை. ஐந்து, ஆறு மாதங்களில் நீர்க்குமிழி போன்ற கர்ப்பம் விழுந்தால் பிதாவிற்குப்போல் ஞாதிகளுக்கும் ஸ்நானமுண்டு. அந்த மாதங்களிலேயே கடினமான கர்ப்பம் விழுந்தால், பிதாவிற்கும் ஞாதிகளுக்கும் மூன்று நாள் ஆசௌசம்; மாதாவிற்கு நாலு மாஸத்தில் நான்கு நாட்களும் ஐந்தாவது மாஸத்தில் ஐந்து நாளும் ஆறுவது மாதத்தில் ஆறு நாளும் ஆசௌசம். 1

2. ஏழாவது மாஸம் முதல் பெண் பிறந்தால் பிதாவிற்கும் ஸஹோதரர்களும் பின்னோதரர்களுமான ப்ராதாக்களுக்கும், பிதாவினுடைய பின்னோதரர்களும் ஸஹோதரர்களுமான ப்ராதாவிற்கும் அவன் பிள்ளைகளுக்கும் பிதாமஹனுக்கும் அவன் ப்ராதாவிற்கும் பத்து நாள் ஆசௌசம். பின்னோதரனான பிதாவின் ப்ராதாவினுடைய புத்திரனுக்கு ஆசௌசமில்லை என்பர் சிலர். 2

3. ஏழாவது மாஸம் முதல் ஆண் பிறந்தால் ஏழு தலைமுறைக்கு உட்பட்ட ஞாதிகள் எல்லாருக்கும் பத்து நாள் ஆசௌசம். ஏழு தலைமுறைக்கு உட்பட்ட ஞாதிகள், ஸபிண்டர்கள் என்று சொல்லப்படுவார்கள். ஸமானோதகர்களுக்கும் (எட்டாவது தலைமுறை முதல் பதினான்கு தலைமுறை வரை ஸமானோதகர்) மூன்று நாள் ஆசௌசம். 1

4. .மாதாவிற்கோ என்றால்? பெண் பிறந்தால் பிறந்த தினம் முதல் (40) நாள் வரையிலும், ஆண் பிறந்தால் (30) நாள் வரையிலும் அசுத்தியுண்டு. 4

5. பிறந்த குழந்தையானது ஆணாய் இருந்தாலும் பெண்ணாய் இருந்தாலும் மாதாமகனுக்கும் மாதாமஹிக்கும் மூன்று நாள் ஆசௌசம். மாதாமஹன் இல்லாத போதிலும் மாதா மஹிக்கு மாத்திரம் மூன்று நாள் ஆசௌசம். இரண்டு பேர்களும் இல்லாத போதிலும் அம்மான் வீட்டில் ப்ரஸவித்தாலும் அல்லது அம்மான் ப்ரஸவச் செலவு கொடுத்தாலும் அம்மானுக்கு ஒரு நாள் ஆசௌசம். இந்த இரண்டும் இல்லாவிடில் ஆசௌசமே இல்லை. 5

6. ஜநநாசௌசமானது எல்லாருக்கும் தந்தம் காலம் வரையில்தான். தந்தம் காலம் தாண்டினால் அதிக்ராந்தாசௌசம்

கிடையாது. பிதாவிற்கும் கூடஸ்நான மாத்திரந்தான். நல்ல நாளில் க்ஷௌரஞ் செய்து கொள்ளத் தக்கது. 6

## மரணாசௌசம்

7. பிறந்த குழந்தை பத்து நாளுக்குள் மரித்தால் பிதா முதலிய எல்லா ஞாதிகளுக்கும் ப்ரஸவாசௌச சேஷத்தோடு மரணாசௌசத்திற்கும் நிவ்ருத்தி, பிதாவிற்கு மாத்திரம் ஸ்நாநம். பத்தாவது தினத்தில் மரித்தால் பிதாவிற்கு அன்று முதல் இரண்டு நாள் ஆசௌசம். பத்தாவது தினத்தின் ராத்ரி கடைசி யாமத்தில் மரித்தால் பிதாவிற்கு மூன்று நாள் அதிகமான ஆசௌசம். மற்றவர்களுக்கு இல்லை. 7

8. பிறந்த குழந்தை தொப்புள் கொடி அறுப்பதற்கு முன் மரித்தால் ஞாதிகளுக்கு மூன்று நாள் மாத்திரம் ஆசௌசம். பிதாவிற்கும் ப்ராதாக்களுக்கும் பத்து நாள். தொப்புள் கொடி அறுத்த பிறகு சிசு மரித்தாலும், மரித்தே ஜநித்தாலும் எல்லா ஞாதிகளுக்கும் பத்து நாள் ஆசௌசம் உண்டு என்று வைத்தியநாதீயத்தில் விசேஷம் சொல்லப்பட்டிருக்கிறது. சிஷ்டாசாரம் போல் நடந்து கொள்க. மாதாவிற்கு மாத்திரம் எல்லாவிதத்திலும் **14**வது பாராவில் சொல்லப்பட்டியே சுத்தி. 8

9. பதினோராவது தினம் முதல் ஆறாவது மாஸம் வரையில் கன்னிகையும் பாலனும் மரித்தால் மாதா பிதாக்களுக்கும், ஸஹோதரர்களும் பின்னோதரர்களுமான ப்ராதாக்களுக்கும், பத்து நாள் ஆசௌசம். ஞாதிகளுக்கு ஸ்நாந மாத்திரம். 9

10. ஆறாவது மாஸம் முதல் இருபத்தி நாலாவது மாஸம். முடிவு வரையில் கன்னியா பாலர்கள் மரித்தால் மாதா பிதாக்களுக்கும், ஸஹோதர பின்னோதர ப்ராதாக்களுக்கும், பத்து நாள் ஆசௌசம், ஞாதிகளுக்கு பால மரணத்தில் ஒரு தினமும், கன்யா மரணத்தில் ஸ்நாந மாத்திரமும், இதில் விசேஷத்தை (4)வது பாராவிலும் காண்க. 10

11. இருபத்தி ஐந்தாவது மாஸம் முதல் ஆறாவது வருஷம் முடிவு வரையில் பால மரணத்தில் மாதா பிதாக்களுக்கும், இரண்டுவித ப்ராதாக்களுக்கும் பத்து நாளும், ஞாதிகளுக்கு மூன்று நாளும், ஸஹோதரிக்கும் பிதாவின் ஸஹோதரிக்கும் மாதாவின் ஸஹோதரிக்கும் மாதாமஹனுக்கும் மாதாமஹிக்கும்

அம்மானுக்கும் அம்மாமிக்கும் கூடப் பிறந்தவன் பிள்ளைக்கும் அவன் பத்னிக்கும் பக்ஷிணீ ஆசௌசமுண்டு. மற்ற பந்துக்களுக்கு ஸ்நாந மாத்திரம். 11

12. பந்துக்களுடையவும் ஞாதிகளுடையவும் மரணத்தில் முன் சொல்லப்பட்டும் சொல்லப்படப் போவதாயும் இருக்கிற ஸர்வ விதமான ஆசௌசமும் ஸ்த்ரீகளுக்கும் புருஷர்களுக்கும் விவாஹத்திற்குப் பிறகுதான். ஏனென்றால் ப்ரஹ்மசாரியாய் இருக்கும் காலத்தில் ஆசௌசம் இல்லாமையாலும் அதற்கு முன் பாலர்கள் ஆகையாலும் விவாஹத்திற்குப் பிற்பாடு தான் ஆசௌசானுஷ்டாநத்திற்கு அதிகாரம். 12

13. இருபத்தி ஐந்தாவது மாஸம் முதல் ஆறாவது வருஷம் முடிவு வரையில் கன்னிகையின் மாதா பிதாக்களுக்கும் ப்ராதாக்களுக்கும் பூர்ணமான ஆசௌசம், ஞாதிகளுக்கு ஒரு தினம். அந்தக் காலத்தில் விவாஹம் ஆகியிருந்தால் சொல்லப் போகிற (24)வது பாராவின் படி எல்லாருக்கும் ஆசௌசம். 13

14. ஏழாவது வருஷம் முதல் விவாஹத்திற்கு முந்தி கன்னிகையின் மரணத்தில் மாதா பிதாக்களுக்கும் ப்ராதாக்களுக்கும் பூர்ணமான ஆசௌசம், ஸபிண்டர்களுக்கு மூன்று நாள், மாதா மஹர் முதலாகிய பந்துக்களுக்கு ஸ்நாந மாத்திரம், உடன் பிறந்தான் பிள்ளைக்கு பக்ஷிணீ என்று சிலர். சிஷ்டாசாரம்போல் நடந்து கொள்க. 14

15. ஏழாவது வருஷம் முதல் உபநயநத்திற்கு முந்தி பாலனுடைய மரணத்தில் மாதா, பிதா, ப்ராதாக்களுக்குப் போல் எல்லா ஸபிண்டர்களுக்கும் பத்து நாள் ஆசௌசம், மாதாமஹனுக்கும், மாதாமஹிக்கும் மூன்று நாள், உடன்பிறந்தாளுக்கும் மாதா பிதாக்களின் உடன்பிறந்தாளுக்கும் அம்மானுக்கும் அம்மாமிக்கும் உடன்பிறந்தான் பிள்ளைக்கும் அவன் பத்னிக்கும் பக்ஷிணி மாத்திரமே தான். மற்ற பந்துக்களுக்கும் ஸமானோதகர்களுக்கும் ஸ்நாந மாத்திரம். 15

16. ஏழாவது வருஷத்திற்கு முந்தி உபநயநம் செய்திருந்தால் சொல்லப் போகிற (23)வது பாராவில் கண்டபடி எல்லாருக்கும் ஆசௌசம். அப்படியே மூன்றாவது வருஷத்திற்கு முன் சௌள ஸம்ஸ்காரம் நடந்திருந்தால் தஹந ஸம்ஸ்காரமே செய்யத் தகுந்தது. (11)வது பாராவில் கண்டபடி ஆசௌசம், அப்படி

ஆறுவது மாஸத்திற்கு முன்னர் பல் முளைத்திருந்தால் (10)வது பாராவில் கண்டபடியே எல்லாருக்கும் ஆசௌசம். 16

17. கன்னிகைகளுக்கும் பாலர்களுக்கும் மூன்றுவது வருஷத்திற்கு முன் கநநம் முதலாகிய ஸம்ஸ்காரம் செய்வதாய் இருந்தால் அந்த ஸம்ஸ்காரமானது மரணத்திற்கு மறு தினம் செய்வதாக நேரும் பக்ஷத்தில் அந்த ஸம்ஸ்கார தினம் முதல் கொண்டே ஆசௌசானுஷ்டானம் — இதில் விசேஷம் — ஆஹிதாக்நியின் மரணத்தில் தஹந தினம் முதல் கொண்டு தசாஹம் முதலான ஆசௌசானுஷ்டானம், அநாஹிதாக்நிக்கு மரண தினம் முதல் கொண்டே ஆசௌசானுஷ்டானம். இவ்விடத்தில் ஆஹிதாக்நி என்பதும் அநாஹிதாக்நி என்பதும் மரித்தவனைச் சொல்லுகிறது. அல்லது ஆசௌசம் அனுஷ்டிக்கிறவனைச் சொல்லுகிறதன்று என்று அறியவும். 17

## புநர் தஹநத்தில் ஆசௌச க்ரமம்

18. ஆஹிதாக்நிக்கும் அநாஹிதாக்நிக்கும் ஸ்வ காலத்தில் மந்த்ரபூர்வகமாக ஸம்ஸ்காரம் இல்லாமல் தசாஹ மத்தியத்தில் புநஸ் ஸம்ஸ்காரம் செய்தால் மரணம் முதற்கொண்டே எல்லாருக்கும் ஆசௌசமே அல்லது புநர் தஹநம் முதற்கொண்டு ஆசௌசமன்று. தசாஹத்திற்குப் பிறகு ஆஹிதாக்நிக்கு புநஸ்ஸம்ஸ்காரம் செய்தால், அப்போது புநஸ் ஸம்ஸ்கார தினம் முதற்கொண்டு தசாஹம் முதலான ஆசௌசம், அநாஹிதாக்நிக்கு தசாஹத்திற்குப் பிற்பாடு அஸ்தி ஸம்ஸ்காரம் செய்தால் முன் ஆசௌசம் அனுஷ்டிக்காத பக்ஷத்தில் ஞாதிகளுக்குப் பத்து நாளும், முன் ஆசௌசம் அனுஷ்டித்து உதக தானம் செய்யாமல் இருந்தால் மூன்று நாளும் ஆசௌசம். முன் ஆசௌசமும் அனுஷ்டித்து உதக தானம் செய்திருந்தால் ஆசௌசம் இல்லை. பிரதிக்ருதி தாஹத்தில் முன் ஆசௌசம் அனுஷ்டிக்காமல் இருந்தால் மூன்று நாள். ஆசௌசம் அனுஷ்டித்திருந்து உதக தானம் செய்யாமல் இருந்தால் உதக தான நிமித்தமாக ஒரு நாள் ஆசௌசம், முன் இரண்டும் செய்திருந்தால் ஞாதிகளுக்கு ஆசௌசமே இல்லை. ஞாதிகள் தவிர மற்ற பந்துக்களுக்கு புநர் தஹந நிமித்தமாக ஆசௌச கந்தமே இல்லை. புத்ரர்களுக்கோ என்றால்? அஸ்தி ஸம்ஸ்காரத்திலும் பிரதிகிருதி ஸம்ஸ்காரத்திலும் முன் ஆசௌசானுஷ்டானத்திலும், அதில்லாமையிலும் எப்பொழுதும் பூர்ணமான ஆசௌசமே

உள்ளது. புத்ரன் தவிர வேறொருவன் ஸம்ஸ்காரம் செய்வதாய் இருந்தால் அவனுக்கு அஸ்தி ஸம்ஸ்காரத்திலும் பிரதிகிருதி ஸம்ஸ்காரத்திலும் எப்பொழுதும் மூன்று நாள் ஆசௌசமே உள்ளது. 18

19. ஸ்த்ரீகளுக்கு ரஜோதர்சனம் முதல் மூன்று நாள் அசுத்தி, நாலாவது தினத்தில் ஸ்நாநத்தால் சுத்தி, ஆனாலும் ஐந்தாவது தினத்தில்தான் வைதிக கர்மங்களுக்கு யோக்யதை. 19

20. ஸம்பர்க்காசௌசம் தவிர, பர்த்தாவிற்கு உண்டான ஸர்வ விதமான ஆசௌசமும் பத்னிக்கும் உண்டு. பத்னிக்கு அம்மான் முதலான ப்ந்துக்களின் மரண நிமித்தமான ஆசௌசம் பர்த்தாவிற்கு இல்லையாகிலும் பத்னி ஆசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் பர்த்தாவிற்கு நித்ய கர்மாதிகளில் அனுஷ்டானாதிகாரம் இருந்த போதிலும் அக்னி ஸந்தானத்திலும் ச்ராத்த போஜனத்திலும் அவனுக்குப் யோக்கியதை இல்லை. 20

21. ஸாயம்ஸந்தி என்றும் ப்ராதஸ் ஸந்தி என்றும் சொல்லப்பட்ட இரண்டு ஸந்தியும் கழித்து மூன்று பாகமாகப் பிரிக்கப்பட்ட ராத்ரியின் மூன்றாவது பாகத்தில் ஜநநமோ மரணமோ ரஜஸ்ஸோ உண்டானால் மறு தினம் முதற்கொண்டே யாசௌசம். அதற்கு முன் பாகங்களில் ஆனால் முதல் நாள் தொடங்கியே ஆசௌசம். 21

22. தத்த புத்ரனுடையவும் ஜநக மாதா பிதாக்களுடையவும் மரணத்தில் ஒருவருக்கொருவர் மூன்று நாள் ஆசௌசம். தத்தனுக்கும் ஜநக வம்சஞாதிகளுக்கும் பரஸ்பரம் ஒரு நாள் ஆசௌசம். தத்தனுடைய ஸந்ததி மரணத்தில் ஜநக மாதா பிதாக்களுக்களும் ஆசௌசமில்லை. 22

## உபநீத புருஷன் மரித்தால்

23. ஸபிண்டர்களுக்கு பத்து நாளும் ஸமானோதகர்களுக்கு மூன்று நாளும் மாதாமஹனுக்கும் மாதா மஹிக்கும் அம்மானுக்கும் அம்மாமிக்கும் உடன்பிறந்தாள் பிள்ளைக்கும் அவன் பத்னிக்கும் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் உடன் பிறந்தாளுக்கும் சிறிய தாயார் பெரிய தாயாருக்கும் மூன்று நாள் ஆசௌசம். உடன் பிறந்தாளுக்கும் சிறிய தாயார், பெரிய தாயாருக்கும் பக்ஷிணி மாத்திரம்தான் என்று பக்ஷாந்திரம் உண்டு.

ஆசாரம்போல் நடந்து கொள்க. சிறிய தாயார், பெரிய தாயார் பிள்ளைக்கும், ஷ்டி யார் பெண்ணுக்கும் அத்தைக்கும், அவள் பெண்ணுக்கும், பிள்ளைக்கும், அம்மான் பெண்ணிற்கும், பிள்ளைக்கும் ப்ராதாவின் பெண்ணுக்கும், சிறிய தகப்பனுர் பெரிய தகப்பனுர் உடன் பிறந்தான் பெண்ணுக்கும் பௌத்ரிக்கும் (புத்ரனுடைய பெண்ணிற்கும்) பின்னேதரமான உடன் பிறந்தாளுக்கும் - பக்ஷிணீ, பக்ஷிணீயென்ருல் இரண்டு பகலோடு கூடிய ஒரு ராத்ரியோ அல்லது இரண்டு ராத்ரியோடே கூடிய ஒரு பகலும் ஆகும். 23

## விவாஹித ஸ்த்ரீயின் மரணத்தில்

*24.* விவாஹமான ஸ்த்ரீ மரித்தால் பர்த்தாவின் ஸபிண்டர்களுக்கு தசராத்திரமும், ஸமானேதகனுக்கு த்ரிராத்ரமும், மாதா பிதாக்களுக்கும் ஸஹோதரனுக்கும் உடன் பிறந்தான் பிள்ளைக்கும் உடன் பிறந்தான் பிள்ளைக்கும் தௌஹித்திரனுக்கும் பர்த்தாவின் உடன் பிறந்தான் பிள்ளைக்கும் மாப்பிள்ளைக்கும் பெண்ணிற்கும் மூன்று நாள் ஆசௌசம். இங்கு புருஷர்களுக்கு எந்தெந்த ஆசௌசம் வருமோ அந்தந்த ஆசௌசம் அந்தந்த புருஷர்கள் இல்லாவிட்டாலும் அவரவர்கள் பத்னிக்கும் உண்டென்று அறியவும். உடன் பிறந்தாளுக்கும் உடன் பிறந்தாள் பெண்ணிற்கும், மாதாவின் உடன் பிறந்தாளுக்கும், அவள் பிள்ளைக்கும் பெண்ணிற்கும், அத்தைக்கும், அவள் பிள்ளை, பெண், அம்மான், அவன் பிள்ளை, பெண், மாதாமஹன், மாதாமஹி, பர்த்தாவின் உடன் பிறந்தாள் பெண், பௌத்ரி, தௌஹித்ரி, ப்ராதாவின் பெண், சிறிய தகப்பனுர், பெரிய தகப்பனுர், அவர்கள் பிள்ளை, பெண், பிதாமஹன், பிதாமஹி, பின்னேதரனை ப்ராதா இவர்களுக்கும் பக்ஷிணீ, ஸபத்நீ மாதாவின் மரணத்தில் ஸபத்நியின் பெண்ணிற்கு ஒரு நாள் ஆசௌசம்.

*25.* மாமியார் மாமனுர்களின் மரணத்தில் மாப்பிள்ளைக்கு மூன்று நாள் ஆசௌசம். இந்த விதியானது தன் பத்னி ஜீவித்திருந்தால் அல்லது ஸந்ததி இருந்தால் மட்டுமே. இரண்டும் இல்லாது போனுல் ஒரு நாள் மட்டுமே ஆசௌசமாகும். 25

## விசேஷம்

26. மாதாமஹன், மாதாமஹி இவர்களின் மரணத்தில் தௌஹித்ரன் ஸம்ஸ்காரம் செய்வதாய் இருந்தால் அவனுக்குப் பத்து நாள் ஆசௌசம். ஸமாநோதகன் ஸம்ஸ்காரம் செய்வதாய் இருந்தால் அவனுக்கும் அப்படியே. 26

## ஸந்தேஹாசௌச நிவிருத்தி

27. சிறிய தகப்பனார், பெரிய தகப்பனார் இவருடைய பத்னிகள் மரணத்தில் அவர்கள் பிரதி யோகிகளான ஸ்த்ரீகளுக்கும், மாப்பிள்ளையின் மரணத்தில் மாமியார் மாமனார்களுக்கும், உடன்பிறந்தாள் புருஷன் மரணத்தில் மைத்துனனுக்கும், மைத்துனன் மரணத்தில் உடன் பிறந்தாள் புருஷனுக்கும், மாதாவின் கூடப் பிறந்தவள் புருஷனுடையவும், அத்தையின் புருஷனுடையவும் மரணத்தில் அவர்கள் பிரதி யோகிகளுக்கும் ஆசௌசம் இல்லை. தாயார் கூடப் பிறந்தவள் பிள்ளையின் பத்னி மரணத்தில் அவர்கள் பிரதி யோகிக்கும், அத்தானுடைய பத்னி மரணத்திலும், அம்மாஞ்சியினுடைய பத்னி மரணத்திலும் அவரவர்கள் பிரதி யோகிகளுக்கும், ப்ராதாவின் பத்னி மரணத்தில் நாத்தனாருக்கும், ப்ராதாவின் பிள்ளையுடைய பத்னி மரணத்தில் அவள் பிரதி யோகியான அத்தைக்கும், தௌஹித்ரனுடைய பத்னி மரணத்தில் மாதாமஹன், மாதாமஹி இவர்களுக்கும், உடன்பிறந்தாள் பிள்ளையின் பத்னி மரணத்தில் அம்மான், அம்மாமி இவர்களுக்கும் ஆசௌசம் இல்லை. அப்படியே ஸபத்நீ மாதாவின் மாதா, பிதா, ப்ராதா முதலானவர்களுடைய மரணத்தில் அவரவர்கள் ப்ரதி யோகிகளாகிய ஸபத்நீ புத்ரர்கள் முதலானவர்களுக்கு ஆசௌசம் இல்லை. பந்துவாகையால் ஸ்நாந மாத்திரமே. 27

## அதிக்ராந்த மரணம் கேட்டால்

## புத்ரர்களுக்கு ஆசௌச விதி

28. தேசாந்தரத்தில் உண்டான ஜநநாசௌசமோ, மரணாசௌசமோ பத்து நாட்களுக்குள் கேட்கப்பட்டால் ஞாதிகளுக்கு மீதி நாள் ஆசௌசம். புத்ரர்களுக்கோ என்றால் கேட்ட நாள் முதல் பத்து நாள். அப்படியே பத்னிக்கும்

பொருந்தும். அவர்களுக்கும் ஸஞ்சயனத்திற்கு முன் கேட்டால் மீதி நாள் மாத்ரம் ஆசௌசம். ஸஞ்சயநாநந்தரங் கேட்டால் ஒரு வருஷம் வரையில் புத்ரர்கள் எல்லாருக்கும் ஆசௌசம் ஆகும். பத்னிக்கும் கேட்ட நாள் முதல் பத்து நாள் ஆசௌசம். ஸம்ஸ்காரம் நடந்திருக்கிற விஷயத்தில் ஒரு வருஷத்திற்குப் பிறகு கேட்டாலும் கநிஷ்ட புத்ரனுக்கும், பத்நிக்கும் மூன்று நாள் ஆசௌசம். ஸம்ஸ்காரம் நடக்காது போனால் அவர்களுக்கும் ஒரு வருஷத்திற்குப் பிற்பாடும் பத்து நாள் ஆசௌசம். ஜ்யேஷ்டனுக்கும் முக்கிய கர்த்தாவிற்கும் எக் காலத்திலும் எவ் விதத்திலும் பத்து நாள் ஆசௌசம். ஞாதிகள் தவிர, மற்ற பந்துக்களின் மரணத்தில் ஒரு வருஷத்திற்கு முன் கேட்டால் ஸ்நாந மாத்ரமே. அதன் பிறகு ஸ்நாநமும் இல்லை. *28*

## அதிக்ராந்தமான ஸபத்நீ மாதாவின் மரணத்தில்

*29.* ஒரு வருஷத்திற்கு முன் ஸபத்நீ மாதாவின் மரணம் கேட்கப்பட்டால், மாதாவிற்குப் போல் பத்து நாள் ஆசௌசம். வருஷத்திற்குப் பிறகு கேட்டால் ஸம்ஸ்காரம் நடந்திருக்கும் விஷயத்தில் மூன்று நாளும், நடக்காத விஷயத்தில் மாதா பிதாக்களுக்குப் போல் பத்து நாளும் ஆசௌசம். *29*

## அதிக்ராந்தமான ஞாதியின் மரணம் கேட்டால்

*30.* அதிக்ராந்தமான தசாஹாசௌசத்தைக் கேட்டால், மூன்று மாஸம் வரையில் ஞாதிகளுக்கு மூன்று நாளும், நாலாவது மாஸம் முதல் ஆறுவது மாஸம் முடிவு வரையில் பக்ஷிணீயும், அதன் பிறகு ஒரு வருஷம் வரையில் ஒரு தினமும் ஆசௌசம், ஒரு வருஷத்திற்குப் பிறகு ஸ்நாந மாத்திரம். இங்கு ஞாதிகள் என்று சொன்ன விஷயம் மாதா பிதாக்கள் தவிர ப்ராதா, பிதாமஹர் முதலான எல்லா ஞாதிகளையும் சொன்னபடி, ஆகையால் அவர்களுக்கும் அதுவே ந்யாயம்; இங்கு சொன்ன அதிக்ராந்தா சௌசமானது ஸம்ஸ்காரம் அடைந்த விஷயம், ஸம்ஸ்காரம் நடக்காத பக்ஷத்தில் (18)வது பாராவில் சொன்னபடி ஆசௌச க்ரமம் அறிந்து கொள்ளத் தககது. *30*

## அதிக்ராந்த பந்து மரணத்தில்

31. அதிக்ராந்தமான த்ரிராத்ராசௌளம் (மூன்று நாள் தீட்டு) பத்து நாளுக்குள் கேட்டால் ஒரு நாள், அதிக்ராந்தமான பக்ஷிணீ ஆசௌசம் பத்து நாளுக்குள் கேட்டால் ஒரு காலம், அது எப்படி என்றால்? பகலில் கேட்டால் பகல் மாத்ரமும், ராத்ரியில் கேட்டால் ராத்ரி மாத்ரமும், இந்த இரண்டு ஆசௌசங்களும் பத்து நாளுக்குப் பிறகு கேட்டால் ஸ்நாந மாத்திரத்தினாலேயே கழிந்து விடும், அதிக்ராந்தமான தினசௌசத்திற்கு பத்து நாளுக்குள்ளேயும் ஸ்நாந மாத்ரம்தான். 31

## அனுபநீத மரணத்தில் அதிக்ராந்த விஷயத்தில்

32. ஏழாவது வருஷ ஆரம்பம் இல்லாத உபநயநமாகாதவன் மரணத்தைத் தேசாந்தரத்தில் பத்து நாளுக்குள் கேட்டால் மாதா பிதாக்களுக்கும் ப்ராதாக்களுக்கும் மீதி நாள் ஆசௌசம். மற்றவர்களுக்கு (31)வது பாராவில் சொன்னபடியே ஆசௌசம். இந்த ஆசௌசம் பத்து நாளுக்குள் கேட்டவர்கள் விஷயம். அதற்கு மேல் கேட்டால் மாதா பிதாக்களுக்கும் ப்ராதாக்களுக்கும் ''மூன்று மாஸத்துக்குள் மூன்று நாள்'' என்று சொல்லப்பட்ட ப்ரமாணத்தின் படி மூன்று நாள் ஆசௌசம். அவர்கள் தவிர, மற்ற ஞாதிகளுக்கு ஆசௌசமில்லை. ஸ்நாந மாத்திரமுண்டு. உபநயநமாகாத போதிலும் ஏழாவது வருஷம் ஆரம்பித்திருந்தால் அவனுடைய மரணத்தில் மாதா, பிதா, ப்ராதாக்களுக்குப் போல் ஞாதிகளுக்கும் பத்து நாள் ஆசௌசம். பத்து நாளுக்கு மேல் அவர்களுக்கும் (31)வது பாராவில் சொன்ன அதிக்ராந்தாசௌசத்தின் முறைப்படியே முப்பது காதத்திற்கு மேற்பட்ட தேசாந்தரத்தில் உபயநயநம் இல்லாதவன் மரித்தால் மாதா, பிதா, ப்ராதா தவிர மற்ற ஞாதிகளுக்கு பத்து நாளுக்குள் கேட்டால் ஸ்நாநமே தவிர, ஆசௌசம் இல்லை. 32

33. இவ்விடத்தில் பக்ஷாந்தரம் உண்டு. ஏழாவது வருஷம் ஆரம்பமில்லாத அநுபநீதனுடைய மரணம் தேசாந்தரத்தில் உண்டாகி அதிக்ராந்தமானால் பத்து நாளுக்குள் கேட்டாலும் மாதா, பிதா, ப்ராதா தவிர மற்றவர்களுக்கு ஆசௌசமில்லை. ஸ்நாந மாத்திரந்தான் என்று சிலர் சொல்லுகிறார்கள். அது சரியன்று. 33

## ஸ்த்ரீகளுக்குப் பர்த்தாவோடு ஸமானுசௌசம்

*34.* பர்த்தாவிற்கு உண்டான ஆசௌசம் எல்லாம் ஸ்த்ரீகளுக்கும் உண்டு என்று சொல்லி இருக்கிறபடியால் பர்த்தா மரித்த பிற்பாடும் மாமியார் மாமனுருடைய மரணத்தில் கேட்ட தினம் முதற்கொண்டு பத்து நாள் ஆசௌசம். சிலர் மாதா, பிதா, பர்த்தா இம் மூவர்களுடைய மரணத்தில் மாத்திரம் கேட்ட நாள் முதற்கொண்டு பத்து நாள் ஆசௌசம் சொல்லியிருக்கிறபடியால் மீதி நாள் மாத்திரம் ஆசௌசம் உண்டென்று சொல்லுகிருர்கள். இது சிஷ்டாசாரத்திற்கு விருத்தம். *34*

## யதிகளுக்கும் ப்ரம்மசாரிகளுக்கும்

*35.* ப்ரம்மசாரிகளுக்கு மாதா, பிதா, ஜ்யேஷ்ட ப்ராதா இவர்கள் தவிர மற்ற ஞாதிகளுடைய மரணத்தில் க்ஷௌரமும் தர்ப்பணமும் ஆசௌசமும் இல்லே. மாதா, பிதா, மாதாமஹன், மாதாமஹி ஜ்யேஷ்ட ப்ராதா, பெரிய தகப்பனுர், சிறிய தகப்பனுர், அம்மான், ஆசார்யன் இவர்களுடைய மரணத்தில் தான் ஸம்ஸ்கர்த்தாவாக வரும் காலத்தில் ஸம்ஸ்கார காலத்தில் மாத்திரம் ஆசௌசம், ஸ்நாநம் பண்ணுல் சுத்தி, கீழ்ச் சொல்லியவர்கள் தவிர, மற்றவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்வதாக இருந்தால் ப்ரம்மசர்ய வ்ரத லோபம் வரும். ஸன்னியாஸிகள் மரணத்தில் அவர் பூர்வாச்ரம ஞாதிகளுக்கும் அந்த ஞாதி மரணத்தில் ஸன்யாஸிக்கும் பரஸ்பரம் ஆசௌசம் முதலானவைகள் இல்லே. ப்ரம்மசாரிக்கும் மாதா பிதாக்களுடைய ஸம்ஸ்காரம் செய்வதாக இருந்தால் அன்றைய தினம் முழுவதும் ஆசௌசம் உண்டென்று சிலர் சொல்லுவார்கள். *35*

## ஷண்டாதிகள் விஷயம்

*36.* ப்ரஷ்டையான ஸ்த்ரீ, நபும்ஸகன், பாஷண்டன், கர்மப்ரஷ்டன் இவர்களுடைய மரணத்தில் இவர் ஞாதிகளுக்கும் மற்ற பந்துக்களுக்கும் பரஸ்பரம் மரணுதிகளில் ஆசௌச தர்ப்பணுதிகள் ஒன்றுமே இல்லே. ஆனுல் கீழ்ச் சொல்லிய பிரஷ்டையான ஸ்த்ரீ முதலானவர்களுடைய மரணத்தில் முக்கிய கர்த்தா கீழே சொல்லியவர்களே உடனே மந்த்ரம் இல்லாமல் தகனம் செய்து பிற்பாடு குறித்த காலத்தில் மந்த்ரபூர்வகமாக ஸம்ஸ்காரம் செய்யத் தக்கவன். *36*

இவ்விதம் ஜநந மரணுசௌசங்களின் க்ரமமானது எல்லோருக்கும் தெளிவாய்த் தெரிய வேண்டியதற்காக *(36)* பாராக்களினுல் சுருக்கமாய் எழுதப்பட்டது.

## அகஸன்னிபாதம் — அனேகாசௌசம்

## ஒன்று சேர்ந்தால்

*1.* ஒரு ஜநநா சௌசம் அநுஷ்டிக்கும் காலத்தில் அதற்கு ஸமாநமானதோ? அல்லது குறைந்ததோ? மற்றொரு ஜநநாசௌசம் நேர்ந்தால் முன் ஆசௌசத்தோடே பிற்பட்ட ஆசௌசமும் கழிந்து விடும். அதற்காகத் தனியாக ஆசௌச அநுஷ்டானமில்லை. *1*

*2.* ஒரு ஜநநாசௌசத்தில் பத்தாவது தினத்தில் வேறு ஜநநாசௌசம் உண்டாளுல் முதல் ஆசௌசம் அநுஷ்டித்த பிறகு இரண்டாவது ஆசௌசம் இரண்டு நாள் அனுஷ்டிக்க வேண்டும். முதல் ஆசௌசத்தின் பத்தாவது நாள் ராத்ரி கடைசி யாமத்தில் இரண்டாவது ஆசௌசம் உண்டாளுல் மாத்திரம் முன் சொல்லியபடி இரண்டு நாள், மூன்று நாள், ஆசௌச அநுஷ்டானம். வேறு காலத்தில் உண்டாகி பத்தாவது தினத்தின் ராத்ரியின் கடைசி யாமத்தில் கடைசி விஞடியில் கேட்டாலும் முதல் ஆசௌசத்தோடே பிற்பட்ட ஆசௌசத்திற்கும் நிவ்ருத்தி உண்டாகும். *2*

*3.* முன் ஜநநாசௌசத்தின் பத்தாவது தினம் கழித்து பதினோராவது தினம் ஸூர்யோதய காலத்தில் கேட்டாலும் முன் ஆசௌசத்தோடு நிவ்ருத்தியாகாது, பிற்பட்ட ஜநநாசௌசத்தின் மீதி நாள் ஆசௌசம் அநுஷ்டித்தே தீர வேண்டும். *3*

*4.* அதிக்ராந்தமான ஜநநாசௌசம் ஒருவரும் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. *4*

*5.* அதிகமான ஜநநாசௌசத்தின் கடைசி தினத்தில் ஸ்வல்பமான ஜநநாசௌசம் உண்டாளுல் அதற்காக இரண்டு மூன்று நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டாம். *5*

*6.* ஞாதி விஷயமான ஜநநாசௌச நடுவில் தன் பத்னீ ப்ரஸவித்தால் ப்ரஸவ தினம் முதற்கொண்டு பர்த்தாவிற்கு மாத்திரம் பத்து நாள் ஆசௌசம். ப்ராதாக்களுக்கு முன் ஆசௌச

சேஷத்தோடு நிவ்ருத்தி, ஸூதிகைக்கு மாத்திரம் எப்படியாகிலும் ஸ்வகாலத்திலேயே சுத்தி. 6

7. தசராத்ரமான மரணுசௌசத்தில் தசராத்ரமான மரணுசௌசமும், தசராத்ரமான ஜநநாசௌசத்தில் தசராத்ரமான ஜநநாசௌசமும் நேர்ந்தால் முந்திய ஆசௌசமே பலிஷ்டம், கிழ்க்கண்ட ஆசௌசங்களில் எது தீர்க்க காலாசௌசமோ அது பலிஷ்டம். இந்த விதி ஏக ஜாதீயமான ஆசௌச விஷயத்தில். மரணத்தில் ஜநநமும் ஜநநத்தில் மரணமும் சேர்ந்தால் மரணமே பலிஷ்டம். 7

8. இந்த ஆசௌசங்களில் முந்தியது பிந்தியது என்பதாவது என்னவென்ருல், முன் உண்டானது பின் உண்டானது என்பதே தவிர, முன் கேட்டது பின் கேட்டது அன்று, ஆகையால் பின்னுல் உண்டான ஜநந மரண ஆசௌசம். அனுஷ்டிக்கும் காலத்தில் அதன் முந்திய ஜநந மரணங்களைக் கேட்டால் கேட்ட ஆசௌசத்தின் மீதி தினத்தோடே தத்காலம் அனுஷ்டித்து வருகிற பிந்திய ஜநந மரணுசௌசத்திற்கும் நிவ்ருத்தி உண்டாகும். மாதா, பிதா, பர்த்தா இவர்களுடைய மரணத்தில் கேட்டது முதலே பதது நாள் ஆசௌசம் அல்லது மரணம் முதலன்று. 8

9. ஜநநாசௌச சமயத்தில் மரணுசௌசம் உண்டானுல் அது ஜநநாசௌசத்தைக் காட்டிலும் குறைந்ததாயினும் ஜநநாசௌசத்தோடு நிவ்ருத்தியாகாது. மரணுசௌசம் ஸ்வகாலம் வரையில் அனுஷ்டிக்க வேண்டியது. 9

10. த்ரிராத்ரமான மரணுசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் அதற்குப் பெரியதாகிய தசராத்ரமான ஜநநாசௌசம் உண்டானுலும் மரணுசௌச சேஷத்தோடே ஜநநாசௌசத்திற்கும் நிவ்ருத்தி உண்டாகும். 10

11. ஜநநாசௌச சமயத்தில் அற்பமான மரணுசௌசம் வந்தால் அதன் நிவ்ருத்தி காலத்திலேயே ஜநநாசௌச சேஷமும் நிவ்ருத்தியாகும். 11

## பக்ஷாந்திரம்

12. இவ்விடத்தில் சிலர் ''தீர்க்கத்தால் அற்பாசௌசம் போகும். அற்பாசௌசத்தால் தீர்க்காசௌசம் போகாது'' என்கிற வசனத்தினுல் அற்பமான மரணுசௌச சமயத்தில் அதிகமான

ஜநநாசௌசம் உண்டானாலும் அதிகமான ஜநநாசௌச சமயத்தில் அற்பமான மரணாசௌசம் உண்டானாலும், மரணாசௌசத்தோடு ஜநநாசௌசம் நிவ்ருத்தமாகாது. ஸ்வ காலத்திலே தான் நிவ்ருத்தமாகும் என்று சொல்லுகிறார்கள். வேறு சிலர் முன் சொல்லிய வசனம் ஏகஜாதீயமான ஆசௌச விஷயமானதால் அதற்கு அபவாதமாக ''அற்பமாகிய மரணாசௌசத்தில் அதிகமாகிய ஜநநாசௌசம் உண்டானால் அற்பமான மரணாசௌசத்தோடு ஜநநாசௌசம் நிவ்ருத்தமாகுமே அல்லது அதிகமான ஜநநாசௌசம் ஸ்வகாலம் வரையில் அனுஷ்டிக்க வேண்டாம்'' என்றும், ''அதிகமான ஜநநாசௌசத்தில் அதற்குக் குறைந்ததாகிய மரணாசௌசம் உண்டானாலும், மரணாசௌசத்தோடே ஜநநாசௌசமும் நிவ்ருத்தகமாகும். ஜநநாசௌசம் ஸ்வகாலம் வரையில் அனுஷ்டிக்க வேண்டாம்'' என்று இவை முதலான வசனம் இருக்கிறபடியால் ஜநநாசௌசம் அதிகமாயிருந்த போதிலும் அற்பமான மரணாசௌசத்தோடே நிவ்ருத்தமாகும் என்பதில் யாதொரு ஆக்ஷேபமும் இல்லை. ஆகிலும் ''மரணாசௌசத்தைக் காட்டிலும் அதற்கு ஸமானமோ அற்பமோ ஜநநாசௌசம் உண்டானால் மரணாசௌசத்தோடே நிவ்ருத்தியாகும். பத்து நாளாகிய ஜநநாசௌசமானது அற்பமாகிய மரணாசௌசத்தால் நிவ்ருத்தியாகாது'' என்று இவை முதலான விசேஷ வசனங்கள் இருக்கிறபடியால் இரண்டு பக்ஷங்களும் சாஸ்திர ஸம்மதங்கள்தான். ஆகையால் சிஷ்டாசாரம் போல் நடந்து கொள்வது. 12

13. மரணாசௌசத்தின் பத்தாவது நாள் தசராத்ரமான ஜநநாசௌசம் உண்டானாலும், மரணாசௌசம் அநுஷ்டித்த பிறகு (2வது) பாராவில் சொல்லியபடி இரண்டு மூன்று நாள் ஜநநாசௌசம் அநுஷ்டிக்க வேண்டும். 13

14. மரணாசௌசத்தின் பத்தாவது தினத்தில் வேறு தசராத்ரமான மரணாசௌசம் உண்டானாலும் (2வது) பாராவில் சொல்லியபடியே முந்திய ஆசௌசம் அனுஷ்டித்த பிறகு பிந்திய ஆசௌசத்திற்காக இரண்டு மூன்று நாள் அனுஷ்டிக்க வேண்டும். 14

15. அதிகமான மரணாசௌசத்தின் பத்தாவது நாள் அற்பமான மரணாசௌசம் உண்டானால் முந்திய ஆசௌசத்தோடே பிந்திய ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். 15

16. முன் ஆசௌசத்தின் கடைசி தினத்தில் ஜநநாசௌச கட்டத்தில் சொல்லிய ரீதியாக பிந்திய மரணம் உண்டானால் மாத்திரம் இரண்டு மூன்று நாள் அதிகமாக ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும். அல்லது அதன் பிறகு உண்டாகிய மரணத்தை பத்தாவது நாளில் கேட்டால் அதனுடைய பத்தாவது நாள் ராத்ரியின் கடைசி யாமத்தின் கடைசி க்ஷணத்தின் முன் கேட்டாலும் முந்திய ஆசௌசத்தோடே நிவ்ருத்தமாகும். 16

17. முந்திய ஆசௌசத்தின் கடைசி தினத்தில் மறுபடியும் தசராத்ராசௌசம் உண்டானால் எப்படி உத்தராசௌசத்திற்காக இரண்டு, மூன்று நாள் ஆசௌசம் அதிகமாக அனுஷ்டிக்க வேண்டுமோ? அதுபோலவே அந்த ஆசௌசத்தின் கடைசி தினத்தில் மூன்ருவதாகிய தசராத்ராசௌசம் உண்டானால் அதற்காக இரண்டாவது ஆசௌசத்தின் பிறகு இரண்டு மூன்று நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும். ஆனாலும் இரண்டு தச ராத்ராசௌசங்கள் சேர்ந்தால் இரண்டாவது தசராத்ராசௌசத்தை இரண்டு மூன்று தினங்கள் அனுஷ்டிக்க வேண்டுமென்று அனேக வசனங்கள் காணப்படுகின்றன. இவ் விசேஷமானது ''ஸம்பூர்ணசௌச விஷயம்'' என்கிற வாக்யமும் வைத்யநாதீயத்தில் காணப்படுகிறது. பிரக்ருதத்தில் இரண்டாவது ஆசௌசமானது இரண்டு மூன்று நாள் அனுஷ்டிக்கக் கூடியதாலும் மூன்ருவது ஆசௌசம் பத்து நாள் அனுஷ்டிக்கக் கூடியதாலும முன் சொன்ன அந்த வசனத்திற்கு விஷயம் இல்லாமலே இரண்டாவது ஆசௌசத்தோடே மூன்ருவது ஆசௌசத்திற்கும் நிவ்ருத்தி உண்டாகலாம் என்றும், ''முந்திய ஆசௌசத்தோடு பிந்திய ஆசௌசமும் நிவ்ருத்தமாகும்'' என்னும் இவை முதலான வசன ஸ்வாரஸ்யத்தால் என்றும், அல்லது இரண்டாவது ஆசௌசத்தைக் காட்டிலும் மூன்ருவது ஆசௌசமானது தசராத்ரமாகையால் அதிகமாகையாலே மூன்ருவது ஆசௌசத்தின் உத்பத்தி தினம் முதல் பத்து நாள் அனுஷ்டிக்க வேண்டியதாகும் என்றும் அல்லது இரண்டாவது ஆசௌசத்தின் பத்தாவது தினத்தோடு மூன்ருவது ஆசௌசமும் கழிந்து விடுமென்றும், இப்படி பலவிதமான சங்கை உண்டாகலாம். அப்படி இருந்த போதிலும் அந்த வசனங்கள் அதிகமாக இரண்டு மூன்று நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டியதற்காக வந்திருக்கிற இரண்டாவது ஆசௌசம் குறைந்ததன்று என்பதில் தாத்பர்யமாகையால் முன் ஆசௌசத்தினுடைய கடைசி தினத்தின் பிந்திய ஆசௌசம்

ப்ராப்தமானுல் முந்திய ஆசௌசத்திற்குப் பிறகு பிந்திய ஆசௌசம் இரண்டு நாள் அனுஷ்டிக்க வேண்டுமென்று இவை முதலான வசனங்களின் ஸ்வாரஸ்யத்தாலும் முன் சொன்ன யுக்திக்கு இணங்கியதாலும் முன் சொன்ன அர்த்தமானது சரியென்று தோன்றுகிறது. சிஷ்டாசாரம்போல் வ்யவஸ்தை செய்து கொள்க. 17

18. முந்திய ஆசௌசத்தின் கடைசி தினத்தில் இரண்டாவது ஆசௌசம் ப்ராப்தமானுல் அதற்காக இரண்டு மூன்று நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டதன்றோ அப்படி இரண்டு மூன்று நாள் அனுஷ்டித்த பிறகு மூன்ருவதாகிய தசராத்ராசௌசம் ப்ராப்தமானுல் இரண்டாவது ஆசௌசத்தின் பத்தாவது தினத்திலேயே மூன்ருவது ஆசௌசமும் நிவ்ருத்தமாகும் என்பது ஸித்தம். 18

19. ஜநநாசௌசத்தின் பத்தாவது தினம் தாண்டி வேறு ஜநநாசௌசம் முந்தியதன் பத்தாவது தினத்தில் உண்டானதாகக் கேட்டால் அந்த ஜநநாசௌசத்தை உண்டான தினம் முதல் தசராத்ரம் அனுஷ்டிக்க வேண்டும். 19

20. முதல் மரணுசௌச மத்தியில் உண்டான இரண்டாவது மரணுசௌசத்தை முதல் ஆசௌசத்தின் மத்தியில் கேட்டால் முதல் ஆசௌசத்தோடே இரண்டாவது ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். முந்திய ஆசௌசம் கழிந்த பிறகு அதிக்ராந்தம் இல்லாத இரண்டாவது ஆசௌசம் கேட்டால் அதன் மீதியான தினம் வரையில் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும். அதிக்ராந்தமான பிறகு கேட்டால் "மூன்று மாஸம் வரையில் மூன்று நாள்" என்கிற வசனத்தின்படி ஆசௌசம் ஸித்தம். இதுபோல் மற்றதும் தெரிந்து கொள்க. 20

21. இவ்விடத்தில் சிலர் ஒரு ஆசௌசத்தின் மத்தியில் பிராப்தமான மற்ருெரு ஆசௌசத்தை முந்திய ஆசௌசம் கழிந்த பிறகு கேட்டால் அதற்காக மறுபடியும் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. உதாஹரணமாக ஒருவன் ஒரு தசராத்தராசௌசம் அனுஷ்டித்து வருகிருன். அதன் மத்தியில் தேசாந்தரத்தில் மரணுசௌசம் உண்டானுல் பூர்வாசௌசத்தோடே இந்த ஆசௌசமும் நிவ்ருத்திக்கத் தகுந்ததாகையால் அந்த இரண்டாவது ஆசௌசத்தை முதல் ஆசௌசம் கழிந்த பிறகு கேட்டாலும் அதற்காக ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டாம். அந்த ஆசௌச

வசனங்களில் ஆசௌசத்தோடு ஆசௌசம் கலந்தால் மிச்சமான தினத்தோடே சுத்தி உண்டென்று விதித்திருக்கிறபடியால். எப்படி என்றால் ஒருவன் ஸ்நாநம் பண்ணிய பிறகு ஸ்நானத்திற்கு முந்தி தனக்கு நேர்ந்த ஒரு அசுத்தியைக் கேட்டால் அந்த அசுத்திக்காக மறுபடியும் ஸ்நாநம் செய்ய வேண்டாம். முன் செய்திருந்த ஸ்நானத்தினாலேயே இந்த அசுத்தியும் நிவ்ருத்தமாகுமோ அதுபோலென்று சொல்லுகிறார்கள். இந்த பக்ஷத்தை வைத்தியனாதர் ''இவ்விடத்தில் சிலர்'' என்று எடுத்துச் சொல்லியபடியால் அவருக்கு ஸம்மதமில்லை என்று தோன்றுகிறது. 21

22. தேசாந்தரத்தில் முன்னும் பின்னும் ஆக இரண்டு மரணம் உண்டாகி, பிந்திய ஆசௌசம் கேட்டு அனுஷ்டிக்கும் காலத்தில் தத்காலம் கழியாத முன் ஆசௌசத்தைக் கேட்டால் கேட்ட முதலாவது ஆசௌசத்தின் சேஷமான தினத்தோடு தான் அனுஷ்டித்துக் கொண்டு வருகிற இரண்டாவது ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். இரண்டாவது ஆசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் அதிக்ராந்தமான பூர்வாசௌசத்தைக் கேட்டால் அந்த ஆசௌசமானது ''மூன்று மாஸம் வரையில் மூன்று நாள்'' என்கிற வசனத்தின் படி மூன்று நாள் அனுஷ்டிக்க வேண்டியதாலும் தத்காலம் அனுஷ்டித்து வருகிற இரண்டாவதான ஆசௌசம் தசராத்ரமானபடியாலே பலிஷ்டமானபடியால் இரண்டாவது ஆசௌசத்தோடே முதல் ஆசௌசமும் கழிந்து விடும். 22

23. தேசாந்தரத்தில் இரண்டு மரணம் உண்டாகி இரண்டும் அதிக்ராந்தமாய் இரண்டாவது ஆசௌசத்தை முன் கேட்டு த்ரிராத்ரம் ஆசௌசம் அனுஷ்டித்து வருகையில் முந்திய மரணத்தைக் கேட்டால், அதன் மீதி நாள் அதிக்ராந்தாசௌசம் அனுஷ்டிக்க வேண்டியது. பிந்திய ஆசௌசத்தினால் முந்திய ஆசௌசம் நிவிருத்தமாகாது. 23

24. அதிக்ராந்தமான மரணாசௌசம் மூன்று நாள் அனுஷ்டிக்கும் காலத்தில் மூன்று மாஸம் தாண்டிய ஒரு மரணாசௌசத்தைக் கேட்டால் தத்காலம் அனுஷ்டித்து வருகிற பிந்தியதான திரிராத்ராசௌசத்தோடு முந்திய ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். முந்தியது பக்ஷிணியாசௌசம் ஆகையால், பிந்தியது த்ரிராத்ராசௌசத்தைக் காட்டிலும் துர்பலமாகும். 24

25. அதிக்ராந்தமான முன் மரணத்தின் த்ரிராத்ராசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் அதிக்ராந்தமான பின் மரணத்தைக் கேட்டால் அது முந்திய மரணாசௌசத்தோடு கழிந்து விடும், ஸமாநாசௌசங்கள் ஒன்று சேர்ந்தால் முந்திய ஆசௌசம் பலமுள்ளது. 25

26. அதிக்ராந்தமான த்ரிராத்ராசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் தசாஹமான மரணாசௌசம் நேர்ந்தாலும் தேசாந்தரத்தில் உண்டானதைக் கேட்டாலும் பிற்பாடு வந்தது தசராத்ரமாகையால் பலிஷ்மானபடியால் அதோடுதான் பூர்வாசௌசம் நிவ்ருத்தமாகும். 26

27. மூன்று மாஸம் தாண்டிய ஞாதி மரணத்தைக் கேட்டு ஆசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் மூன்று மாஸத்திற்குள் அடங்கிய ஞாதி மரணத்தைக் கேட்டால் அதனுடைய மீதியான ஆசௌசம் அனுஷ்டிக்கவே தகுந்தது. அற்பமான முன் ஆசௌசத்தால் அதிகமாகிய பிந்திய ஆசௌசம் நிவ்ருத்தமாகாது. 27

28. ஸமானோதகனுடைய மரணாசௌசமும் ஸபிண்டனுடைய பத்து நாளுக்கு மேற்பட்டு மூன்று மாஸத்திற்குள் அடங்கிய அதிக்ராந்தாசௌசமும் சேர்ந்தால் இரண்டும் துல்யமானபடியால் அவைகளில் எது முந்தியதோ அதோடு பிந்தியதும் நிவ்ருத்தமாகும். 28

29. ஒரு தினத்தில் தத்காலம் உண்டாகிய ஜநநத்திற்காகவோ மரணத்திற்காகவோ ஆசௌசம் அனுஷ்டிக்கப்படுகிறது. அதே தினத்தின் தேசாந்தரத்தில் உண்டாகிய ஜநநமோ மரணமோ கேட்கப்படுகிறது. கேட்கப்பட்ட அந்த ஆசௌசத்திற்கு அன்றைய தினமே பத்தாவது தினமானால் "முன் ஆசௌசத்தின் கடைசி தினத்தில் ஸமானமான ஒரு ஆசௌசம் உண்டானால்" என்கிற வசனத்தினாலே ப்ரக்ருதம் தான் அனுஷ்டித்து வருகிற ஆசௌசத்திற்காக இரண்டு நாள், மூன்று நாள் அதிகமாக ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டியது, மறுதினம் தசம தினமானால் பிந்திய ஆசௌசம் இரண்டு நாள் அனுஷ்டிக்கப்பட்டபடியால் கேட்ட ஆசௌசத்தோடே முடிந்து விடும். 29

30. ஸபிண்டனுடைய மரணாசௌச மத்தியில் மாதா, பிதா, பர்த்தா, பத்னீ, பிள்ளை, பெண் இவர்களின் மரணம் நேர்ந்தாலும்

தன் பத்னி ப்ரஸவித்தாலும் முன் ஆசௌசத்தோடு நிவ்ருத்தமாக மாட்டாது, ஸ்வ காலம் வரையில் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும். 30

*31.* தன் பத்னி ப்ரஸவித்த ஆசௌச மத்தியில் ஸபிண்டன் மரணம் நேர்ந்தால் ப்ரஸவாசௌசத்தின் பத்தாவது தினத்தில் க்ஷௌரம் பண்ணிக் கொண்டு ஞாதி மரணத்தின் மீதி நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும். த்ரிராத்ரம் முதலான ஆசௌசம் நேர்ந்தாலும் இதே ந்யாயம், ''ஜநநாசௌசம் மரணாசௌசத்தைக் கழிக்க மாட்டாது'' என்கிற வசனத்திற்கு பிறந்த பத்து நாளுக்குள் நேர்ந்த சிசு மரணம் தவிர, மற்ற இடங்களில் ஸங்கோசம் இல்லாமையால், 31

*32.* மாதா பிதாக்களின் மரணாசௌச மத்தியில் பத்னி ப்ரஸவித்தால் மரணாசௌசத்தோடு ப்ரஸவாசௌசமும் நிவ்ருத்தமாகும். சூதிகைக்கு மாத்திரம் ஸ்வ காலத்தில் தான் சுத்தி, மாதாவினுடைய மரணாசௌசத்தில் பிதாவின் மரணம் நேர்ந்தால் அன்று முதல் பத்து நாள் ஆசௌசம் அனுஷ்டிக்கவும் முந்திய மாதா மரணாசௌசத்தோடு பிந்திய பித்ரு மரணாசௌசம் நிவ்ருத்தம் ஆகாது. 32

*33.* பித்ரு மரணாசௌச மத்தியில் மாதாவின் மரணம் நேர்ந்தால் பித்ரு மரணாசௌசத்தின் பிறகு மாதாவிற்காக பக்ஷிணி! (ஒன்றரை நாள்). 33

*34.* மாதாவினுடையவோ பிதாவினுடையவோ ஆசௌசம் அனுஷ்டிக்கும் காலத்தில் பத்னி, பிள்ளை முதலானவர்கள் மரித்தாலும் முந்திய ஆசௌசத்தோடு பிந்திய ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். 34

*35.* புத்திரனுடைய மரணாசௌச மத்தியில் பத்னி மரணம் நேர்ந்தால் அன்று முதற்கொண்டு தசராத்ராசௌசம் அனுஷ்டிக்கவும். பத்னியின் மரணாசௌச மத்தியில் புத்ரன் மரித்தால் பத்னியின் ஆசௌசத்தோடே புத்ரனுடைய ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். 35

*36.* பர்த்தாவின் மரணாசௌச மத்தியில் மாமியார் மாமனார் முதலானவர்கள் மரித்தாலும் பர்த்தாவினுடைய ஆசௌசத்தோடே பிந்திய ஆசௌசமும் நிவ்ருத்தமாகும். 36

37. மாமியார், மாமனுர் முதலானவர்களுடைய மரணுசௌச மத்தியில் பர்த்தா மரித்தால் அன்று முதல் பர்த்தாவிற்கு பத்து நாள் ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டும். 37

38. மாதா, பிதாக்களின் மரணுசௌசம் தவிர மற்ற மரணுசௌச மத்தியில் வருகிற மரணுசௌசமானது முந்தியதோடு ஸமானமாகிலும் குறைந்திருந்தாலும் தான் ஸம்ஸ்காரம் செய்யும் விஷயமாக இருந்தால் மாத்திரம் முந்திய ஆசௌசத்தோடு நிவ்ருத்தமாக மாட்டாது. 38

39. மரணுசௌசம் உத்தமம், மத்யமம், அதமம் என்று மூன்று விதம். அதில் உத்தமமாவது கேட்ட தினம் முதல் பத்து நாள் அனுஷ்டிக்கத் தகுந்தது. மத்யமமாவது. உண்டான தினம் முதல் தத்தம் காலம் வரையில் முழுமையும் அனுஷ்டிக்கத் தகுந்தது. அதமமாவது: முந்திய ஆசௌசத்திஞலோ அதிகமான ஆசௌசத்திஞலோ கழியத் தகுந்தது. உத்தமாசௌசம் புருஷர்களுக்கு மாதா, பிதாக்களின் மரணத்திலும் ஸ்த்ரீகளுக்கு மாமியார், மாமனுர், பர்த்தா இவர்களின் மரணத்திலும் மத்யமமானது பத்னியினுடையவும் பிள்ளையினுடையவும் தான் ஸம்ஸ்காரம் செய்யத் தகுந்தவனுடைய மரணத்திலும் உண்டென்று அறியத் தகுந்தது, அதமமானது முன் சொல்லப்பட்ட இரண்டு விஷயங்கள் தவிர, மற்ற விஷயங்களில் என்று அறியவும். 39

40. இவ்விதம் மரணுசௌசத்திலும் ஜநநாசௌசத்திலும் வேறு ஆசௌசம் கலந்தால் அனுஷ்டிக்க வேண்டிய ஆசௌசத்தின் ப்ரகாரமானது சதகம் முதலாகிய கிரந்தத்தை அனுஸரித்து நாற்பது பாராக்களிஞல் சொல்லப்பட்டது. இதில் அஜ்ஞாநத்திஞல் ஏதாவது பிழை இருந்தாலும் பெரியோர்களால் பொறுக்கத் தகுந்தது.

ஆசௌச ஸங்க்ரஹம்
அகஸன்னிபாதம் முற்றிற்று.

---

# शुद्धाशुद्ध पत्रिका

| पुटं | पङ्क्तिः | अशुद्धं | शुद्धं |
|---|---|---|---|
| 7 | 15 | वा॒र्चं, | वाचं, |
| 25 | 5 | स्पृश्य प्राची वि | स्पृश्य, प्राची, वि |
| 26 | 6 | सूर्यां | सूर्यां- |
| 63 | 23 | அஸ்திக்கு | அஸ்தி கு |
| /68 | 18 | सोमाः | सोमाः । |
| | 19 | । वा | वा |
| 69 | | अपरप्रयोगः | अस्थिसञ्चयनं |
| 76 | 11 | तेनामृतॅस्यॅ | तेना॒मृतॅस्य, |
| 103 | | தலைப்பில் | एकादशाहेकर्तव्यं |
| 119 | 14 | शृ॒ण॒त | श॒णु॒त |
| 121 | 1 | र॒यिंश्च, | र॒यिश्चॅ, |
| | 1 | दी॒र्घा॒यु॒त्वश्चॅ | |
| 179 | 14 | देवेभ्यो | दे॒वेभ्यों |
| | 19 | । य॒ वै॒ | । वै॒ |
| 182 | 18 | क॒वयॅः | क॒वयॅः, |
| 184 | 10 | आ॒य॒सा॒स॒ | आ॒या॒सा॒य॒ |
| 199 | 2 | सङ्क्ल्प | सङ्कल्प |
| | 3 | इति | इति, |
| 199 | 6 | अच्यत | अच्युत |
| | 15 | रूपेन | रूपेण |
| | 17 | बलिंश्च | बलिश्च ॥ |
| 201 | 18 | 10வது | 4வது |